REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 5| சென்னை: ஆடி 2உ புதன் (17—7—57) ★ ★ வெளியூர்: ஆடி 3உ வியாழன் (18—7—57) [இதழ் 27

## கேரளத்தின் நபர் விகித வருமானம் ரூ. 219-தான்

திருவனந்தபுரம், ஜூலை 16—

'கேரளத்தின் நபர் விகித வருமானம் ரூ. 219-தான் என்று புள்ளிவிவர இலாகா தகவல் தந்திருக்கிறது.

கேரளத்தின் தேசிய வருமானம் ரூ. 319·4 கோடி என்றும், இந்தியா முழுவதுக்குமாக தேசிய வருமானம் ரூ. 9,650 கோடி என்றும் கேரளத்தில் 1955—56-ம் ஆண்டுக் கணக்குப்படி மக்கள் தொகை 1·46 கோடி என்றும் கூறப்பட்டிருக்கிறது.

# 'வடக்கு வாழ்கிறது!-தெற்கு தேய்கிறது!'

## 'அங்கே பணம் குவிகிறது; இங்கே விலை ஏறுகிறது'

### 'அகில இந்திய அமைப்பு தென்னாட்டைச் சித்திரவதை செய்கிறது'

### 'அபிவிருத்தித் திட்டங்களில் அநீதி இழைக்கப்பட்டுள்ளது

'தென் மாநிலத்தவர் விழித்தெழ வேண்டிய நேரம் நெருங்கிவிட்டது'

### பிரபல பொருளாதார நிபுணர் டாக்டர் தாமஸ் கருத்துரை

சென்னை, ஜூலை 16—

"தென்னகத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ள திட்டத்தின் தொகை, அதன் தேவைக்கும் வளர்ச்சிக்கும் ஒத்ததாக இல்லை.

"தென்னகத்திற்குப் பெருந்தொகையை மத்திய அரசு செலவிட வேண்டியது இன்றியமையாதது மட்டுமல்ல—நியாயமானதும் ஆகும்.

"பலவகையான வளர்ச்சிக் கட்டத்திலுள்ள மாநில ஆட்சி அமைப்புகளைக் கொண்டுள்ள ஒரு இணைப்பில், வளர்ச்சியின் முழுச்சுமை, தொழில்துறையில் முன்னேறியுள்ள மாநில ஆட்சி அமைப்புகள் மீதே சுமரும்.

"வடக்கிற்கும் தெற்கிற்கும் உள்ள வெறும் வழக்கு அல்ல இது; முழு நாட்டின் நலத்தையும் பாதிக்கின்ற பெரும் பிரச்சினையாகும்.

"மற்ற இந்தியப் பகுதியிலிருந்து, தென்னிந்தியா தெளிவாகப் பிரிந்து காட்சியளிக்கிறது. அதில் இடம் பெற்றுள்ள நான்கு மொழி பிரிவுகளிடை இன்னும்கூட சிறப்பான ஒருமைப்பாடு இருந்துவருகிறது. உண்மையான சத்துள்ள நலன்கள் அவைகளை ஒன்றுகப் பிணைத்துள்ளன."

—இவ்வாறு, பிரபல பொருளாதார நிபுணரான டாக்டர் பி. ஜே. தாமஸ் அவர்கள், 'தென்னாட்டின் பொருளாதார நலனும், மண்டலக் குழுவும்' எனும் தலைப்பில், பொது விவகாரக் குழுவின் ஆதரவில் நடைபெற்ற கூட்டமொன்றில் பேசுகையில் குறிப்பிட்டுவிட்டு, மேலும் பேசியதாவது:—

"நிர்வாகக் கோட்பாடுகளை, அதிலும் குறிப்பாக பொருளாதார நடைமுறைகளை உருவாக்குவதிலும் செயலாற்றுவதிலும், தென்னிந்திய மாநில ஆட்சி அமைப்புகளுக்குள்ளாக இருந்து வரும் உறவு முறையை ஒரு பொருட்டாகக் கொள்ளவேண்டும். எனவே, இப்பகுதியில் ஒரு பெரும் பரப்பு தனி மண்டலமாக உருவாக்கப்பட்டு, அதற்கு ஒரு மண்டலக் குழுவும் அமைக்கப்பட்டிருக்கிறது. இம்மண்டல ஏற்பாட்டில், மைசூர் ஆட்சி அமைப்பும், இருந்துத் தீரவேண்டியபடி, இணைக்கப்படவேண்டும்.

"அனைத்து இந்திய மட்டத்தில் தொழில் வளர்ச்சிக்கான திட்டம் தீட்டப்பட்டு வருவதற்குப் பதிலாக, மண்டல மட்டத்தில் திட்டம் தீட்டப்படவேண்டும்.

"அதுவுமன்றி, மாநில ஆட்சி அமைப்பு மட்டத்தில், ஒவ்வொரு மாநிலத்தின் உற்பத்தியையும், தனி நபர்களின் வருமானத்தையும் கணக்கிடவேண்டும்.

"இத்துறையில் தென்னாட்டு மக்களுக்குக் கடமை உண்டு. அரசியல் தொடர்பற்றவர்கள் ஒன்றுபட்டு இதற்கென சங்கம் காணவேண்டும்."

டாக்டர் தாமஸ் தமது பேச்சில் மேலும் குறிப்பிட்டதாவது:—

"நதிகளையும், இயற்கை வளங்களையும் அதிலும் குறிப்பாக மின்சார உற்பத்திச் சாதனங்களையும், உணவுப் பொருளையும் தனக்குள் பொதுப்படையாகப் பயன்படுத்துவதில் கருத்துச் செலுத்த தென் மண்டலக் குழு முன்வந்திருப்பது மகிழ்ச்சிக்குரியதாகும்.

"அதுமட்டுமன்றி, திட்டத்தின்கீழ் மேற்கொள்ளப்பட இருக்கும் தொழில் வளர்ச்சித் திட்டங்களில், 'மிகுதியான மக்கள் தொகை நிறைந்தும் பொருளாதாரத் துறையில் தேய்ந்தும் கிடக்கும் இப்பகுதி'க்கு, உரிய பங்கினைப் பெறுவதிலும், இம்மண்டலத்தில் இடம் பெற்றுள்ள ஆட்சி அமைப்புகளுக்கிடை ஒத்துழைப்பு இருக்கவேண்டியது இன்றியமையாததாகும்.

"உயர்ந்தபட்ச நலனை நாடு பெறவேண்டும் என்பதுதான் 'நமது பெடரல் யூனியன்' அரசின் குறிக்கோளாக இருக்குமானால், கூட்டுறவு அடிப்படை இலட்சியமான 'சக்திக்கேற்ற உழைப்பு—தேவைக்கேற்ற வசதி' என்ற தத்துவம் மேற்கொள்ளப்படவேண்டும்.

"தொழில் துறையில் முன்னேறி இருக்கின்ற மாநில ஆட்சி அமைப்புகளிடமிருந்து மிகுதியாகப் பணந் திரட்டி, அதிகமான மக்கள் தொகையைக் கொண்டுள்ளதும் தொழில் துறையில் குறைந்துள்ளதுமான பகுதிகளின் முன்னேற்றத்திற்குப் பெருந்தொகை செலவிடவேண்டும்.

"பல்வகையான வளர்ச்சிக் கட்டத்திலுள்ள பல மாநில ஆட்சி அமைப்புகளைக் கொண்டுள்ள இணைப்பாக இந்தியா இருக்கின்றது. எனவே, தொழில் வளர்ச்சியின் சுமை முழுதும், தொழில் வளம் மிகுதியும் பெருகியுள்ள மாநிலங்கள் மீதே சுமரும்.

"ஒவ்வொரு பகுதியின் தேவைகளுக்கேற்ப மண்டல மட்டத்தில் திட்டங்கள் உருவாக்கப்படவேண்டும். ஆனால் துரதிருஷ்டவசமாக இந்தியப் பேரரசு, தேசம் முழுதுக்கும் தொழில் திட்டம் தீட்டி இருக்கின்றது.

### விலை ஏற்றத்திற்குக் காரணம்

"திட்டமிட்ட பொருளாதாரம், பெருந்தொகை முதலீட்டை உள்ளடக்கிக்கொண்டிருக்கின்றது. பெருந்தொகை முதலீட்டின் விளைவாக மக்களிடை மிகுதியான பணம் கிடைக்க வழி ஏற்படுகிறது. அதாவது மொத்த வருமானம் உயர்கிறது என்பதும், எந்தப் பகுதியில் அத்தகு முதலீடு செய்யப்பட்டுள்ளதோ அந்தப் பகுதியின் வாங்கும் சக்தி கூடுகிறது என்பதுமே இதற்குப் பொருளாகும்.

"குறிப்பிட்ட ஒரு பகுதியின் மிகுவருமானப் பெருக்கமானது, மற்ற பகுதிகளுக்குக் கேடான விளைவையே கொடுக்கும். இந்தியாவில் காணப்படும் தற்கால பொருள் விலை ஏற்றத்திற்கும், உணவுப் பிரச்சினை பயங்கர நிலையை அடைந்திருப்பதற்கும் இப்போக்கே பெரிதும் காரணமாகும் என்று நான்(தாமஸ்) கருதுகிறேன்."

"இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழும், பாதுகாப்பு (இராணுவம்)திட்டத்தின் கீழும், இந்தியப் பேரரசின் வருமானத்தில் பெரும் பகுதி வடநாட்டு மாநிலங்களிலேயே செலவிடப்பட்டு வருவதும் பொருள் விலை ஏற்றத்திற்குரிய மூல காரணமாகும்.

"யூனியன் பகுதிகளுக்குள்ளாக பரவலாகச் செலவிட இந்தியப் பேரரசு முன்வந்து இருக்குமானால், பற்றாக்குறை திட்டத்தின் செலவுத் தொகையை மேலும் கூடுதலாக்கினாலும்கூட,' பொருள் விலை ஏற்றத்திற்கு இடமிருந்திருக்காது.

"உணவுத் தானியங்களுக்கும், மற்ற பயன்படு பொருள்களுக்கும், அங்கு மிகுதியான பணம் குவிந்திருக்கின்ற காரணத்தினால், வடநாட்டில் அதிகமான தேவை இருக்கின்றது. அவ்வாறு குவிந்துள்ள பணம், பொருட்களின் விலையைக் கூட்டிவிட்டது. ஆனால், அப்பொருள் விலையேற்றம் வடநாட்டுடன் கட்டுப்பட்டு இருந்துவிடவில்லை. இந்தியா முழுவதிலும் அவ்விலையேற்றம் பரவி இருக்கின்றது.

"தங்களிடமுள்ள அரிசியைத் தெற்கிற்கு அனுப்புவதைவிட பம்பாய்க்கு அனுப்புவதில் ஆந்திர வியாபாரிகள் தீவிரமாக இருக்கக் காரணம் என்ன?"

என்றும் பி. ஜே. தாமஸ் அவர்கள் கேட்டுள்ளார்.

[பேச்சு முடியவில்லை; தொடர்ந்து வெளிவரும்]

## தார் பாக்டரி முதலாளியின் சட்ட விரோதப் போக்கு!

### மூடிய ஆலையைத் திறக்கக் கோரி தொழிலாளர்கள் மறியல்

### 102 பேர்களைப் போலீசார் கைது செய்துள்ளனர்

சென்னை, ஜூலை 17—

தோண்டையார்பேட்டை தார் பாக்டரி முதலாளிகள் கடந்த 18—6—57 முதல் தொழிற்சாலையை சட்டவிரோதமாக மூடி, அதில் வேலைபார்த்துவந்த 400 தொழிலாளர்களையும், அவர்களின் குடும்பத்தையும் பட்டினி போட்டு வதைத்து வருகின்றனர்.

நிர்வாகிகளின் இந்த நியாய விரோதமான போக்கிற்கு எதிராக, வேலை இழந்து தவிக்கும் தொழிலாளர்கள் வேறு வழியில்லாமையால், கடந்த 10-7-57-ந் தேதிமுதல் தொழிற்சாலை முன்பாகவும், தங்கசாலைத் தெருவில் உள்ள விற்பனை நிலையத்தின் முன்பாகவும், முதலாளியின் [illegible] வீட்டு முன்பாகவும் அமைதியான முறையில் மறியல் செய்து வருகின்றனர்.

இதுவரையில், மறியலில் ஈடுபட்ட தொழிலாளர்களில் 102 பேர்வரை கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

தொடர்ந்து மறியல் கிளர்ச்சியில் ஈடுபட தொழிலாளர்கள் முடிவு செய்துள்ளனர்.

மறியலில் ஈடுபடுவதின் நோக்கம் எல்லாம், தங்களுக்கு இழைக்கப்பட்டுள்ள அநீதியை சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டு வருவதும், மக்களின் ஆதரவைப் பெறுவதும்தபன் என்று தொழிலாளர் சங்கம் விளக்கம் தந்திருக்கிறது.

## படகு கட்டும் தொழிலுக்குக் கைவிரிப்பு!

சென்னை, ஜூலை 17—

தூத்துக்குடியில் படகு கட்டும் தொழிலை ஆரம்பிக்கும் யோசனை கிடையாதாம்! வேறு எங்கும் துவக்கவும் நோக்கம் இல்லையாம்! தனிப்பட்டவர்கள் முன்வந்தாலும் உதவி மானியம் அளிக்கும் யோசனை கிடையாதாம்!

சட்ட சபையில் கேள்வி நேரத்தின்போது, மீன் வள அமைச்சர் லூர்து அம்மையார் இவ்வாறு தெரிவித்தார்.

ஆயினும் சென்னையில் மீன் பிடிக்கும் படகுகள் கட்டுவதற்கான தொழிற்கூடம் ஒன்று நிர்மாணிப்பது பற்றி பரிசீலனை செய்து கொண்டிருக்கிறார்களாம்

## எகிப்தில் புதிய வரலாற்றுச் சம்பவம்

### பாராளு மன்றத்திற்கு முதன் முறையாக இரு பெண்கள் தேர்வு

கெய்ரோ, ஜூலை 15—

எகிப்திய வரலாற்றில் வேறெப்போதும் இல்லாத வகையில், முதன் முறையாகப் பாராளு மன்றத்திற்கு இரு பெண்மணிகள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர்.

குமாரி ராவ்யா ஆத்தியா என்ற 32 வயதான பட்டதாரி, கெய்ரோ, தொகுதி ஒன்றிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

திருமதி அமீனா ஷக்கிரி என்ற பெண்மணி அலெக்சாண்டிரியாவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

எகிப்திய பாராளுமன்றத்தில் 345 உறுப்பினர்களில், இவர்கள் இருவர் மட்டுமே பெண்கள்!

## ரூ. 89,366 மட்டுமே டில்லி தந்ததாம்!

சென்னை, ஜூலை 17—

பொது சுகாதாரத்துடன் 'நர்ஸ்' தொழிலை இணைத்துப் பயிற்சி யளிக்கும் நோக்குடன் பள்ளிகள் துவங்க மத்திய அரசாங்கம் ரூ. 89,366 மட்டுமே சென்னைக்கு உதவியளித்துள்ளது என்று சட்டசபையில் அமைச்சர் தெரிவித்தார்.

Best copy available.

நம் நாடு
தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்
சென்னை 17—7—57 புதன்

# தார் கம்பெனி தொழிலாளர் அவதி

தார் கம்பெனி என்ற பொதுப் பெயரில், சென்னை—தண்டையார் பேட்டையில் தொழில் நிறுவனம் ஒன்று இருந்து வருகிறது. அதில் நான்கு தொழில் பிரிவுகள் உள்ளடங்கியுள்ளன.

அத்தொழில் நிறுவனம் கடந்த இருபது ஆண்டுக் காலமாக இயங்கிவந்திருக்கின்றது. அதில் ஏறத்தாழ நானூறு தொழிலாளர்கள் தொழில் செய்துவந்துள்ளனர்.

தார் கம்பெனி என்ற பொதுப் பெயரில் இயங்கிவந்து கொண்டிருந்த மேற்படி நான்கு தொழிற்சாலைகளுக்கும் உரிமையாளராக இருப்பவர் ஒருவரே யாவர். அவர் இருந்தாற்போல் இருந்து சென்ற திங்கள் 18-ம் நாள் முதற்கொண்டு, தொழிற்சாலைகளை மூடிவிட்டார். அதாவது தன்னை முதலாளியாகக் கொண்டு தொழில் புரிந்துவந்த நானூறு தொழிலாளர்களையும் மறைமுகமாகத் துன்புறுத்தத் தொடங்கிவிட்டார்.

மேற்படி தொழிற்சாலைகளை மீண்டும் திறக்கும்படி, தொழிற் சங்கம் எடுத்துக்கொண்ட முயற்சிகள் அனைத்தும் தோற்றுப்போயின. முதலாளிக்கு மனமாற்றம் ஏற்படவில்லை. அவருடைய விரும்பத்தகாத முடிவு, நூற்றுக் கணக்கான உயிர்களை வாட்டிவதைப்பதில் வந்து நிற்கின்றது.

தொழிற்சாலைகளை முதலாளி கதவடைப்புச் செய்த உடனே, சென்னை முதலாவது வட்டத்தில் பணியாற்றிவரும் நமது செயற்குழு, முதலாளியின் முடிவை கண்டித்துத் தீர்மானித்து இருக்கின்றது. அதே நேரத்தில், முதலாளியின் பிடிவாதத்திற்கு பலியாகித் தவிக்கும் தொழிலாளர்களுக்கு ஆறுதல் கூறியும், அவர்களுடைய இலட்சிய வெற்றிக்கு ஆதரவு காட்டியும், நமது கிளைக் கழகம் தீர்மானம்நிறைவேற்றியுள்ளது.

மூடப்பட்ட தொழிற்சாலைகளைத் திறப்பதற்காக, தொழிலாளர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகள் அனைத்தும் பயனற்றுப் போகவே, தொழிலாளர்கள் அமைதியான நேரடி நடவடிக்கையில் ஈடுபடுவது என முடிவு கட்டினர். அம்முடிவுபடி, சட்டத்திற்குட்பட்டு, மூடப்பட்டுக்கிடக்கும் தொழில் நிறுவனத்தின்முன் அமைதியான முறையில் மறியல் செய்ய முனைந்தனர். இத்திங்கள் பத்தாம் நாள் முதல் அம்மறியல் அறப்போரில் தொழிலாளர்கள் ஈடுபட்டுவருகின்றனர்.

தொழிற்சாலைகளை வலிய மூடிவிடுவதின் மூலம், நூற்றுக் கணக்கான தொழிலாளர்களையும், அவர்களுடைய மனைவி மக்களையும் கொடுந் துன்பத்தில் தள்ளி அகமகிழ்ந்து கொண்டிருக்கும் முதலாளியைத் தட்டிக் கேட்கத் துணியாத காங்கிரசு அரசாங்கம், சட்டத்திற்குட்பட்டு அமைதியான முறையில் மறியல் அறப்போரில் ஈடுபட்டுவரும் தொழிலாளர்கள்மீது ஆவேசமாகப் பாய முன்வந்து இருக்கிறது. தினம் தினம் மறியலில் கலந்துகொள்ளுகின்ற தொழிலாளர்களை, 'சட்டம் — சமாதானம்' என்ற பெயர் கூறி, கைது செய்வதிலும், அவர்கள்மீது வழக்குத் தொடர்வதிலும் தீவிரமாகப் பணிபுரிந்து வருகிறது பாதுகாப்புப் படை!

சட்டத்தை நிலைநாட்டும் பொறுப்பில் உள்ள அறமன்றத் தலைவர்களும் சட்டத்தின் கோரிக்கைப்படி, மறியல் தோழர்களை, இரண்டு நாள் முதல் ஒரு கிழமைவரை சிறையில் கிடக்க வேண்டும் என்று தீர்ப்பளித்து வருகின்றனர். இதுவரையில் நூற்றுக்கு மேற்பட்ட தொழிலாளர்களுக்கு சிறைத் தண்டனை அளிக்கப்பட்டுள்ளது.

ஆட்சியாளர் ஏவும் கொடிய அடக்குமுறைகளுக்கு ஆளாகாது, எவரும் உரிமையைப் பெற்றதாக நாம் கேட்டது கிடையாது. அதுபோன்றே, அடக்குமுறைகளுக்கு அடிபணிந்து, உரிமை வேட்கையைக் கைவிட்டுவிட்ட சேதியையும் நாம் கேள்விப்பட்டது கிடையாது. அடக்குமுறைகளை எல்லாம் சுக்குநூறுக்கிவிட்டு, இறுதியாக உரிமை இலட்சியம் வெற்றி பெற்ற உண்மையைத்தான் நாம் வரலாற்றில் கண்டிருக்கின்றோம்.

தொழிற்சாலைகளை மூடி, தொழிலாளர்களை வெளியில் தள்ளி, குடும்பத்துடன் பட்டினி கிடந்து சாக, தம் மனம் போல் நடந்துகொள்ளத் துணிந்துள்ள முதலாளிக்கு எதிராக, அரசாங்கத் தொழில்துறை அதிகாரிகள் இதுவரை எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன என்பது மூடுமந்திரமாகவே இருக்கிறது. நூற்றுக்கணக்கான தொழிலாளர் பெற்றுள்ள துயர்குறித்து காங்கிரசு தொழிலாளர் அமைச்சர் அறிந்திருக்கின்றாரா இல்லையா என்பதும் தெரியவில்லை.

காங்கிரஸ் பகட்டாகக் கூறிவரும் சமதர்மவடிவ சமுதாய அமைப்புக்கு தார் கம்பெனி தொழிலாளர் பட்டுவரும் அல்லல் ஒரு எடுத்துக்காட்டு போதும்! தாம் கூறும் சமதர்ம வடிவ சமுதாயத்தை அடைவதற்கான வழிதான், காங்கிரஸ் தொழில் அமைச்சர் பின்பற்றுகின்ற வழிபோலும்!

முதலாளியின் கொட்டம் ஒடுக்கப்பட்டு, தொழிலாளர்களின் துயர் களையப்பட வேண்டும் என்பதே நமது கழகத்தின் குறிக்கோளாகும். எனவே, தார் கம்பெனி தொழிலாளர்களின் நடைமுறை மறியல் அறப்போராட்டத்திற்கு, தனது முழு ஆதரவையும் தர நமது கழகம் எப்பொழுதும் தயாராக இருக்கின்றது. இந்த நற்செய்தியை அறப்போரில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களுக்கு அறிவித்துக் கொண்டு அவர்களுடைய நியாயமான கோரிக்கை வெற்றி பெறுவதற்கான முயற்சிகள் அனைத்தையும் மேற்கொள்ளும்படி கழகத்தவர்களையும், மற்ற பொதுமக்களையும் பணிவன்புடன், வேண்டிக்கொள்ளுகிறோம். தார் கம்பெனி தொழிலாளர் அறப்போர் வெல்க!

# அதிகார மமதை கொண்ட டெல்லிக்கு அசாம் மாநிலம் தரும் அறைகூவல்

## 'டெல்லியை எதிர்பாராமல் தொழிற்சாலையை நிறுவுவோம்'

### மாநில நிதி மந்திரி கருத்து

கௌஹாத்தி, ஜூலை 13—

அசாம் மாநில சர்க்கார் டெல்லியின் தயவை எதிர்பார்த்துக் கொண்டிராமல், தாங்களாகவே ஒரு எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலையை நிறுவப் போவதாக மாநில நிதி மந்திரி தேபேஷ்வர் சர்மா தெரிவித்திருக்கிறார்.

தாங்கள் உத்தேசிக்கும் தொழிற்சாலை 15-இலட்சம் டன் உற்பத்திச் சக்தியுடையதாயிருக்கும் என்றும், அதனை நிறுவுவதற்குப் பணம் கிடைப்பதிலோ, தொழில் நுட்ப உதவி கிடைப்பதிலோ கஷ்டம் இருக்கும் என்று நினைக்கவில்லை என்றும் அவர் கூறியிருக்கிறார்.

'கௌஹாத்தியில் தொழிற்சாலை நிறுவ டெல்லி மறுத்துவிட்டது மிகப் பெரிய அநீதியாகும்; அங்கு தொழிற்சாலை நிறுவுவதென்பது எல்லா வகையாலும் பொருத்தமுடையது என்பதை யாரும் மறுக்கமுடியாது' என்றும் அவர் கூறியிருக்கிறார்.

★

## மக்கள் சபையில் ஒத்திவைப்புப் பிரரேபணை

### சபைத் தலைவர் நிராகரிப்பு

'அசாமில் இல்லாது, பீகாரில் உத்தேசத் தொழிற்சாலையை நிறுவுவது என்ற டெல்லி சர்க்காரின் முடிவினால், அசாமில் ஏற்பட்டுள்ள நிலைகளை விவாதிக்க சபை நடவடிக்கைகளை ஒத்திவைக்கவேண்டும்' என்று, இரு பி. சோ. உறுப்பினர்கள் கொண்டுவந்த பிரரேபணையை மக்கள்சபைத் தலைவர் நிராகரித்தார்.

உடனே அவர்கள் இருவரும் சபையிலிருந்து வெளிநடப்புச் செய்திருக்கின்றனர்.

முன்னர் இதுகுறித்துப் பேசிய சுரங்கம் மற்றும் எண்ணெய் இலாகா மந்திரி மாளவியா, 'அசாம் மாநிலத் தலைவர்களின் கருத்து எப்படியிருக்கும் என்பதைத் தெரிந்துதான் இந்த முடிவைச் செய்தோம்' என்று அகம்பாவத்துடன் கூறினாராம்!

குறுக்கிட்டுப் பேசிய பண்டித நேருவோ, 'எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலை நிறுவுவது என்பது, பொருளாதார—தொழில் நுட்ப—பாதுகாப்பு முதலிய அம்சங்களைப் பொறுத்ததாகும்' என்று கூறினாராம்!

★

## காங்கிரசார் கண்டனம்

இதற்கிடையில், அசாம் மாநில காங்கிரஸ் கமிட்டியும், காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்களும் அடங்கிய கூட்டுக் கூட்டத்தில், டெல்லியின் போக்கிற்கு எதிராக கண்டனம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

'அசாமில் நிறுவப்படாமல், எண்ணெய்த் தொழிற்சாலையை பீகாரில் நிறுவுவது என்ற டெல்லியின் முடிவு, பிரதேசங்களின் சமசீரியான பொருளாதார வளர்ச்சி என்ற அடிப்படைக் கொள்கைகளுக்கு விரோதமானதாகும்' என்றும் கண்டனத் தீர்மானம் நிறைவேற்றி யிருக்கின்றனர்.

## 'ஆண் நர்சு'களின் குறைகள்

### 'அரசாங்கத்திற்குத் தெரியுமா?'

ஏ. கோவிந்தசாமி கேள்வி: அமைச்சர் பதில்

சென்னை, ஜூலை 16—

நர்சுகளின் குறைகளை ஆராய்வதற்கு நியமிக்கப்பட்ட நர்சிங் குழுவின் முடிவுகளை மத்திய அரசாங்க சுகாதாரக் குழு பரிசிலித்துள்ளது என்று சட்டசபையில் அமைச்சர் தெரிவித்தார்.

ஏ. கோவிந்தசாமி:—''ஸ்டான்லி மருத்துவ மனையில் உள்ள 'ஆண் நர்சு'களுக்கு உள்ள குடியிருப்புப் பகுதிகள் சுகாதாரத்துடன் அமையவில்லை என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? அவர்களின் குறைகளை அரசாங்கம் அறியுமா?''

அமைச்சர்:—நேரில் சென்று பார்வையிட்டு வேண்டியதைச் செய்கிறோம்,'

## கொள்கையை வெளிப்படுத்தவில்லையாம்!

### குறிப்புதான் வெளியிட்டனராம்!

சென்னை, ஜூலை 16—

மாவட்ட ஆட்சி மன்றங்கள் கலைக்கப்படும் என்று சமீபத்தில் அமைச்சர் கூறியதாக செய்தித்தாள்களில் வெளியானதைச் சுட்டிக்காட்டி, 'கொள்கை விளக்கத்தை சட்ட மன்றத்திற்கு வெளியே முதலில் வெளியிடுவது விதிகளுக்கு முரணானதல்லவா?' என்று சட்டசபையில் எதிர்க்கட்சித் தலைவர் ஒரு கேள்வி எழுப்பினார்.

நிதி அமைச்சர்:—'கொள்கைக்கான குறிப்புகள் தயாரிக்கப்பட்டுள்ளதே தவிர, கொள்கை இன்னும் உறுதியாக உருவாக்கப்படவில்லை.''

## அவ்வளவுதானா?

சென்னை பொது ஊழியர் தேர்வில் 1956-ம் ஆண்டில் 2,478 பேர் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டனர் என்றும், 1,473 பேர்களுக்கே அரசாங்க வேலை கிடைத்துள்ளது என்றும் சட்டசபையில் அமைச்சர் தெரிவித்தார்.

## வேலையற்றோர் 1,47,564 பேர்!

### 20,966 பேருக்கு மட்டுமே வேலைத் தரப்பட்டதாம்

சென்னை, ஜூலை 16—

சென்னை மாநிலத்திலுள்ள வேலைத் தேடித் தரும் நிலையத்தில் கடந்த 1956 ஏப்ரல் முதல் தேதியிலிருந்து 1957 மார்ச் 31-ந் தேதி வரையில் மொத்தம் 1,47,564 பேர் வேலை வாய்ப்பு வேண்டும் என்று கோரி பதிவு செய்து கொண்டனர் என்றும், மொத்தம் 20,966 பேர்களுக்கு மட்டுமே இந்தக் காலத்தில் வேலை தரப்பட்டது என்று சட்டசபையில் புள்ளி விவரங்களை அமைச்சர் வெளியிட்டார்.

# பொதுத் தேர்தல்களில் 'குறி' போடும் முறை

## தேர்தல் கமிஷன் சிபாரிசை டில்லி ஏற்றுள்ளதாம்

புதுடில்லி, ஜூலை 15—

இனி நடைபெறப்போகும் தேர்தல்களில், கூடுமானவரையில், ஓட்டுச் சீட்டில் குறியிடும் முறையே கையாளப்படும்.

ஒவ்வொரு அபேட்சகருக்கும் தனி ஓட்டுப் பெட்டி வைப்பதென்ற தற்போதைய முறைக்குப் பதிலாக இந்தக் குறியிடு முறையைப் பின்பற்றலாமென்ற தேர்தல் குழுவின் யோசனை ஏற்கப்பட்டுவிட்டதாக இந்திய சர்க்கார் அறிக்கை ஒன்று கூறுகிறது.

பிரதம தேர்தல் அதிகாரிகளின் சிபாரிசுகளின்மீது பின்தங்கியுள்ள பகுதிகளில் மட்டும் இது அமுல் நடத்தப்பட்டதென்றும் அது குறிப்பிடுகிறது.

புதுமுறை வருமாறு:—

ஒவ்வொரு வாக்குப் பதிவுச் சீட்டிலும அபேட்சகர்களின் பெயர்களோடு அவர்களுடைய சின்னங்களும் பொறிக்கப்பட்டு இருக்கும். வாக்குப் பதிவுச் சாவடியிலுள்ள தனியறைக்குள் சென்று தனக்குப் பிடித்தமான அபேட்சகர் பெயருக்கு எதிரில் ஒவ்வொரு வாக்காளரும் குறியிடுவர். பின்னர் சாவடி தலைமை அதிகாரி, அபேட்சகர்களின் ஏஜெண்டுகள், மற்றவர்கள் முன்னிலையில் வைக்கப்பட்டுள்ள பெட்டியில் வாக்குப் பதிவுச் சீட்டைப் போடுவார்; போடுமுன் சீட்டின் பின்புறமுள்ள முத்திரையை அதிகாரி கணிக்கை செய்வார்.

இப்புதிய முறையினால், செலவு மட்டுமன்றி, சிக்கலும் குறைவு; இப்போது கூறுவதுபோல், புகார்களுக்கு இடமிருக்காது என்றும் எதிர்பார்க்கப்படுவதாக சர்க்கார் அறிக்கை மேலும் கூறுகிறது.

ஓட்டுப் பெட்டிகளில் விஷமம் நடந்துவிட்டதாகவோ, ஒரு பெட்டியிலிருந்து இன்னொன்றுக்கு சீட்டுகள் அகற்றப்பட்டுவிட்டதாகவோ குற்றச்சாட்டுகள் எழக் காரணமே இராது. மேலும், பல்வேறு தனியறைகளுக்கு பல ஓட்டர்கள் ஏககாலத்தில் சென்று ஓட்டுரிமையைச் செலுத்த இயலுமாதலால் முன்னிலும் விரைவாக ஓட்டுப் பதிவு நடந்தேறும்.

பெட்டிகளுக்கு முத்திரையிடுவது போன்றவற்றில் செலவழியும் அவகாசமும் தவிர்க்கப்படும். அதுமட்டுமன்றி, பெட்டியினுள் அல்லது வெளியே சீட்டுகளைப் போட்டுவிட்டுப் போவதால் ஓட்டுகள் நிராகரிக்கப்படுவதும் நின்றுவிடும். எந்த ஓட்டரும் தம் சீட்டை வெளியிலெடுத்துச் செல்வதும் இயலாது.

விரும்பினால், ஓட்டுப் பதிவு முடிந்ததும் அந்தந்தச் சாவடியிலேயே ஓட்டுகளைப் பூர்வாங்கமாக எண்ணும் முறையையும் எதிர்காலத்தில் புகுத்த இயலுமென அவ்வறிக்கை குறிப்பிட்டு, இதனால் துரிதமாகத் தேர்தல் முடிவுகள் தெரியவருமென்றும் கூறுகிறது.



# 'கவர்னர் பதவி அவசியமற்றது'

## 'ஏழை மக்களின் வரிப் பணத்தைப் பாழாக்காதீர்'

### சட்டசபையில் ஏ. கோவிந்தசாமி, எம். பி. சுப்பிரமணியம் கோரிக்கை

சென்னை, ஜூலை 16—

கவர்னர், அமைச்சர்கள், தலைநகர் ஊழியர்கள் ஆகியோர் ஊதிய மானிய இனத்திற்கு ரூ. 1,10,80,000 அனுமதிக்க வேண்டுமென்று நிதி அமைச்சர் சி. சுப்பிரமணியம் சட்டசபையில் கோரினர்.

வெட்டுப் பிரரேபணைமீது கழக உறுப்பினர்கள் ஏ. கோவிந்தசாமி, எம். பி. சுப்பிரமணியம் ஆகியோர் பேசுகையில் கவர்னர் பதவியின் பயனற்ற—ஊதாரித்தனமான செலவுகளைச் சுட்டிக் காட்டியும், அமைச்சர்களின் ஆடம்பரப் போக்கையும் கண்டித்தனர்.

இறுதியில் வெட்டுப் பிரரேபணை தோற்கடிக்கப்பட்டு மானியக் கோரிக்கை நிறைவேற்றப்பட்டது.

தோழர் ஏ. கோவிந்தசாமி அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

''இந்த வெட்டுப் பிரரேபணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற ஆசைப்படுகிறேன். நமது நாடு வெள்ளையன் ஆட்சிக்கு உட்பட்டு இருந்தபோது, அன்னியர்களுக்கும் மக்களுக்கும் தொடர்பை ஏற்படுத்துவதற்குக் கவர்னர் பதவி பயன்பட்டது. கவர்னர், ஒரு தூதுவராகப் பணியாற்ற வேண்டிய நிலைமை இருந்தது; ஆனால் சுதந்திரம் பெற்ற பின்னரும், கவர்னர் பதவியை நீடிக்கச் செய்வது பொருத்தமல்ல; இது தேவையில்லாததோர் பதவியாகும்.

''முன்பிருந்த கவர்னர் பிரகாசா தனது ஊதியத்தில் ஒரு பகுதியைக் குறைத்துக் கொண்டார்; ஆனால், இப்போதுள்ள கவர்னர் அப்படி செய்ததாகத் தெரியவில்லை.

''அமைச்சர்களைப்பற்றி ஒரு சில வார்த்தைகள்; அமைச்சர்கள் சுற்றுப்பயணம் செய்வது அவசியம்தான்; சில சமயங்களில் ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சிக்கு மூன்று அமைச்சர்களும் செல்ல வேண்டியது அவசியமா என்று கேட்க ஆசைப்படுகிறேன். உதாரணத்திற்குச் சொல்லவேண்டுமானால், என்னுடைய தொகுதியில் ஒரு வைத்திய விடுதியின் கட்டிடத்திற்குக் கல்நாட்டு விழாவிற்கு மூன்று அமைச்சர்கள் வந்தனர்; இது தேவையா? அவசியம்தானா? இப்படி அமைச்சர்கள் நடந்து கொள்வது பொதுமக்களுக்குப் பல எண்ணங்களை உண்டாக்குகிறது. 'கட்சிப் பிரச்சாரத்திற்கு அரசாங்கச் செலவில் போகிறார்கள்' என்றும் சிலர் நினைக்கின்றனர்.

''சென்ற ஆண்டில் முதலமைச்சர் விடுதி ஒன்றுக்கு வந்து கால்கோள்விழா நடத்தினர்; ஆனால் இதுவரையில் ஒன்றும் நடைபெறவில்லை; இதை என்னால் சொல்லாமல் இருக்கமுடியவில்லை. முதலமைச்சர் காமராசர் வந்து நடத்திய காரியத்திற்கே இந்தக்கதி என்றால் மற்ற அமைச்சர்களைப்பற்றி கூறத்தேவையில்லை.

''அமைச்சர்களுக்கு இப்போது பெரிய படகு போன்ற கார்கள் வாங்கப்பட்டுள்ளது. அவ்வளவு பெரிய கார்கள் அவசியமா? ஆச்சாரியார் மந்திரியாக இருந்த காலத்தில்சிறிய 'கான்சல்' காரில் சென்றார்! மற்றவர்களுக்கு வழிகாட்டினர்; அவர் காட்டிய வழியை அமைச்சர்கள் பின்பற்றலாம்.

''மேலும், அமைச்சர்களின் சுற்றுப்பயண நிகழ்ச்சிகள் காங்கிரஸ் கட்சியினருக்கு மட்டுமே அறிவிக்கப்படுகிறது; மற்றக் கட்சிகளுக்கும் அதுபற்றி அறிவிக்கப்படவேண்டும்; அப்போதுதான் எல்லா கட்சியினரும் பொதுமக்களின் குறைகளை எடுத்துரைக்க முடியும். சமீபத்தில் பிரதம நீதி மன்றத்தில் பேசப்படும் அளவிற்குக்கூட அமைச்சர்கள் சுற்றுப் பயணம் செய்துள்ளனர் என்று கூறாமல் இருக்கமுடியவில்லை.

''நடைபெறுகின்ற இடைத் தேர்தல்களில் அமைச்சர்கள் பிரச்சாரத்திற்குப் போகும்போது கட்சிக்காரர்களாகப் போக வேண்டுமே தவிர, அமைச்சர்களாக போவது சரியல்ல!

''அமைச்சர்கள் சுற்றுப்பயணத்தின்போது கட்சிக்காரர்கள் வீட்டில் தங்குவது எதிர்க்கட்சியினருக்கு இடையூறாக உள்ளது.

''மேலும், அமைச்சர்கள் பெரிய மாளிகையில் வசிக்காமல், எளியமுறையில் வாழ்ந்து, தங்கள் ஊதியத்தையும், 'படி'ச் செலவையும் குறைத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.''

★

தோழர் எம். பி. சுப்பிரமணியம் அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

''இந்த வெட்டுப் பிரரேபணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். சனநாயக நாட்டில் கவர்னர் பதவி அவசியமற்றது என்பதே என்னுடைய கருத்து. கட்சி வேறுபாடில்லாமல் இந்த விஷயத்தைப் பற்றி ஆராய வேண்டும்.

''வெள்ளையருக்குத் தூதுவர்களாக இருந்தவர்களே கவர்னர்கள்; இந்தக் காலத்திலும் இது தேவையா? அப்படி வேண்டுமென்றாலும், அதற்காக ஆண்டுதோறும் ரூ. 8 இலட்சம் ஒரு தனி நபரின் செலவிற்குப் பயன்படுத்துவது நியாயமா என்று சிந்திக்கவேண்டுகிறேன்.

''அமெரிக்கா போன்ற நாடுகளில் கவர்னர் பதவியை வகிப்பவர்களுக்கு மக்கள் மதிப்பு தருகிறார்கள்; இங்கு தேர்தலில் தோல்வியடைந்தவர்களுக்கும், மக்கள் வெறுப்பைப் பெற்றவர்களுக்கும், வேறு மாநிலங்களிலிருந்து துரத்தப்பட்டவர்களுக்கும் கவர்னர் பதவி தரப்படுகிறது என்பதை உள்ளத்தூய்மையுடன் தெரிவித்துக்கொள்கிறேன். கட்சி சார்பற்றுச் சிந்தித்தால், இப்பதவி தேவையில்லை என்பது வெளிப்படும். இதற்காக ரூ. 8 இலட்சம் ஆண்டுதோறும், ஏழை குடிமக்களின் வரிப் பணத்திலிருந்து பாழாக்குவது சரியாகுமா?

''சிக்கனத்தைக் கையாள அமைச்சர்களின் ஊதியத்தைக் குறைத்துக்கொள்ள வேண்டும் என்று சிலர் கூறினர்கள்; என்னைப் பொறுத்தவரையில் அதனால் அதிக சிக்கனம் ஏற்படாது என்றே கருதுகிறேன். இதைவிட மற்றவைகளில் சிக்கனம் காட்டுவது அவசியம் என்றும் கூறுவேன்.

''அமைச்சர்கள் சுற்றுப்பயணம் செய்வதை கூடாது என்று நான் கூறவில்லை; ஆனால், அந்தச் சுற்றுப்பயணம் பயன்படாத அளவிற்கு—ஒரே நாளில் 10 நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்துகொண்டு அதில் கலந்துகொள்ளுவதால் என்ன பயன் என்று கேட்கிறேன்?

''வட்டார மக்களின் குறைகளைப் புரிந்துகொள்ளவும் அதற்குப் பரிகாரம் தேடவும் அமைச்சர்களால் முடிவதில்லை; சுற்றுப் பயணம் மக்களுக்குப் பயன்படுவதில்லை. மேலும் இதனால் அதிகாரிகளின் வேலையும் தடைபடுகிறது; 4, 5 நாட்களுக்குமுன்னதாகவே பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்வதில் அதிகாரிகள் முழு கவனம் செலுத்துகின்றனர். சுற்றுப்பயணம் அவசியமானால் 3, 4 மாதங்களுக்கு ஒருமுறை பரவலாக ஏற்பாடு செய்வது நல்லது என்று நான் கூற விரும்புகிறேன்.

''சுற்றுப்பயண நேரத்தில் அமைச்சர்கள், தங்களுடன் அதிகாரிகளை மட்டும் அழைத்துச் செல்வது நல்லது. அமைச்சர்கள் தங்களின் சொந்தக் கார்களிலேயே வரவேண்டும். ஆங்காங்கு எம்.எல்.ஏ.-க்கள், எம்.பி.-க்கள், பஞ்சாயத்துத் தலைவர்கள் முதலியவர்களைக் கலந்துபேசி குறைகளைக் களைவதற்கு வழிகாண வேண்டும். சமீபத்தில் பாகல்மேடு பகுதியில் முதலமைச்சர் 200, 300 பேரைக் கூட்டிப் பேசியதால் மட்டும் பயன் ஏற்பட்டுவிடாது. மக்களின் மனுக்களை உடனடியாக கவனிக்கவும், அதுவும் குறுகிய காலத்தில் குறைகளைப் போக்கவும் ஏற்பாடு செய்ய வேண்டும்.

''எம்.எல்.ஏ.-க்களின் கடிதங்களுக்கு உடனே பதில் கிடைக்குமாறு ஏற்பாடுகள் செய்ய வேண்டும்.

''1953-ல், தம்மம்பட்டியில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகத்தைப் பற்றி நான் இரண்டு முறைஎழுதியும்மீண்டும்பலமுறை கவனப்படுத்தியும்கூட அமைச்சர்கள் ஓராண்டுக்காலம் வரையில் கவனிக்காமலேயே இருந்துவிட்டனர் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஒரு சட்டசபை உறுப்பினருக்கே இந்த நிலை என்றால், பொதுமக்களுக்கு என்ன நன்மை ஏற்பட்டுவிடும்?

''இப்போது உள்ள அமைச்சர்கள் தங்களுக்கு உதவியாக வேண்டுமானால் மேலும் உதவி அமைச்சர்களை நியமித்துக்கொள்ளட்டும்; ஆனால் காரியங்கள் தாமதமில்லாமல் நடைபெற வேண்டும்; நிர்வாகத்தின் தரம் உயர வேண்டும்; மக்களுக்கு நன்மை ஏற்பட வேண்டும்.

''மேலும் இதனால், பல இளைஞர்களுக்குப் பயிற்சி ஏற்படும்; அது, வருங்காலத்திற்கும் நல்லது. இப்போது பதவியிலுள்ள அமைச்சர் அடுத்த முறை தேர்ந்தெடுக்கப்படாவிட்டால், இது உண்மையில் பயன்படும்.''

# 'அனுபவத்தைப் படிப்பினையாக அரசாங்கம் ஏற்குமா?'

## சட்டசபையில் க. அன்பழகன் கேள்வி

சென்னை, ஜூலை 16—

குடியேற்றத்தில் உள்ள சுதர்சன் எண்ணெய் ஆலைக்கு சென்னை அரசாங்கம் ரூ. 10 இலட்சம் நிதி உதவி அளித்துள்ளதாம்.

அந்தத் தொகையில் ஒரு பகுதியைக்கூட அரசாங்கம் இன்னும் வசூலிக்கவில்லையாம்!

இந்த ஆலை வேலை செய்யவில்லை என்ற காரணத்தால் ஏலம் விடப்பட்டதாம்!

''அரசாங்கமே ஏன் இந்த ஆலையை நடத்தக்கூடாது?'' என்று கழக உறுப்பினர் எம். பி. சாரதி அவர்கள் ஒரு கேள்வி எழுப்பினர்.

அமைச்சர் பதிலளிக்கையில் இது பற்றித் தீவிரமாக ஆராய்ந்த பின்னர், நஷ்டம் ஏற்படும் என்று தோன்றிய பின்னரே இவ்வாறு முடிவு செய்து விட்டதாகக் கூறினர்.

க. அன்பழகன்:—''பண உதவி கொடுத்த பின்னர் இப்போது நஷ்டம் ஏற்படும் என்று அரசாங்கம் உணருவதால், இனி எதிர்காலத்தில் இம்மாதிரி ஏதேனும் நிதி உதவி செய்வதற்கு முன்னர், இதுபற்றி தீவிரமாக அரசாங்கம் ஆராய்ந்து முடிவு மேற்கொள்ளுமா?''

அமைச்சர்:—''இப்போது புதிய உறுப்பினர்கள் சபைக்கு வந்திருப்பதால், இனி அவ்வாறு நடைபெறாமல் கண்காணிப்பர் என்று நம்புகிறேன்.''

## கல்விச் சலுகை!

### அரசியல் தியாகிகளின் குழந்தைகளுக்குக் கிடைக்கும்?

சென்னை, ஜூலை 15—

அரசியல்தியாகிகளின்குழந்தைகளுக்கு கல்விச்சலுகை உள்ளிட்ட பல உதவிகளை தியாகிகளுக்குத் தருவது பற்றி சர்க்கார் யோசித்துக்கொண்டிருப்பதாக நிதி மந்திரி சுப்பிரமணியம் சட்டசபையில் கூறியிருக்கிறார்.

## கட்டணச் சலுகை

### மேலும் தளர்த்த இயலாதாம்!

சென்னை, ஜூலை 16—

இரயில்வேக்களில் பிரயாணம் செய்யும் 12 வயதிற்குக் குறைவானவர்களுக்கு அரை கட்டணம் வசூலிக்கப்படுவது போன்றே பஸ் போக்குவரத்திலும் அனுமதிக்க முடியாது என்றும், அதனால் அரசாங்கத்திற்கு ரூ. 2,000 நாள் ஒன்றுக்கு வருமானம் குறைந்துவிடும் என்றும், சட்டசபையில் கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில் அமைச்சர் தெரிவித்தார்.

# மறுமலர்ச்சி நூல் நிலைய 4-ம் ஆண்டு விழா - மும்முனைப் போராட்ட நினைவு நாள் கூட்டம்

## தோழர்கள் ஆசைத்தம்பி, கண்ணதாசன் ஆகியோர் கலந்துகொண்டனர்

சென்னை, ஜூலை 17—

15.7-57 மாலை 6-30 மணிக்கு, சென்னை 39-வது வட்ட மறுமலர்ச்சி நூல் நிலைய 4-ம் ஆண்டு விழாவும், மும்முனைப் போராட்ட நினைவு நாள் பொதுக்கூட்டமும், மேற்படி வட்ட அப்பாவு கிராமணித் தெருவிலுள்ள ஓர் இல்லத்தின் மாடியில், தோழர் மு. ர. குமார் தலைமையில் நடைபெற்றது.

விழாவில் தோழர்கள் ஏ.வி.பி. ஆசைத்தம்பி எம்.எல்.ஏ. அவர்களும் கண்ணதாசன் அவர்களும் சிறப்புரை நிகழ்த்தினர்.

மழைத்தூரல் சிறிது இடையூறு விளைவித்தாலும் குழுமியிருந்த பல்லாயிரக்கணக்கான மக்கள், தோழர்களின் கருத்துரையைக் கேட்க ஆர்வமுடன் இருந்தனர்.

கூட்டம் துவங்குவதற்குமுன் அண்ணா அவர்கள் கைத்தறி வாரா விழாவில் ஆற்றிய சொற்பொழிவு ஒலிபரப்பப்பட்டது.

தலைவர் தனது முன்னுரையில், மறுமலர்ச்சி மன்ற வளர்ச்சி குறித்தும், கழகத் தோழர்கள் கடமை குறித்தும் சிறிது நேரம் பேசினர்.

அடுத்துப் பேசிய தோழர் கண்ணதாசன் அவர்கள், மும்முனைப் போராட்டம் நடைபெற்றபோது தாம் அதில் ஆற்றிய பணி குறித்தும், கழகம் மேற்கொண்ட போராட்டம் குறித்து விளக்கியும், இன்றைய அரசியல் நிலை குறித்தும் சிறிது நேரம் பேசினர்.

பின்னர் பேசிய தோழர் ஏ. வி. பி. ஆசைத்தம்பி அவர்கள், தி. மு. கழகத்தின் மும்முனைப் போராட்டம் குறித்தும், அதன் இலட்சியம் குறித்தும், கழகம் இதுவரை ஆற்றியுள்ள தொண்டினையும்—ஆற்றிவரும் தொண்டுகளையும் விளக்கி நீண்ட ஓர் சிறப்புரையாற்றினர்.

தலைவர் முடிவுரைக்குப் பின் நன்றிகூற கூட்டம் இனிது முடிவுற்றது.

வரதராசபுரம் தி. மு. கழகத் தொண்டர்களால் தோழர் ஏ. வி. பி. ஆசைத்தம்பி அவர்களுக்கு ஓர் பாராட்டு இதழ் வாசித்தளிக்கப்பட்டது. (ஈ. கி.)

# தமிழ் நாட்டில் உணவு நிலைமை

## சர்க்கார் தரும் தகவல்

சென்னை, ஜூலை 13—

பொதுமக்களுக்கு, கட்டுப்படுத்தப்பட்ட விலைக்கு அரிசியை விற்பதற்காகநிறுவப்பட்ட நியாய விலைக் கடைகள், 1957 மே மாதம் 31-ந் தேதியுடன் முடிவான இரு வாரங்களில் 693 ஆக இருந்தன வென்றும், 31—5—57 வரை 88,421 டன் பச்சை, புழுங்கல் அரிசி மத்திய அரசாங்கக் களஞ்சியங்களிலிருந்து தரப்பட்டது என்றும் சர்க்கார் செய்தி ஒன்று கூறுகிறது.

இந்த இரு வாரங்களில் செங்கற்பட்டு, சென்னை மாவட்டங்களைத் தவிர, இதர மாவட்டங்களில் ஓரளவுக்கு மழை பெய்தது. திருநெல்வேலி, வட ஆற்காடு, திருச்சி மாவட்டங்களில் சில பகுதிகள் தவிர மற்ற இடங்களில் பாசனத்துக்குத் தண்ணீர் போதுமானதாக இருந்தது. பயிர்கள் பொதுவாக எங்கும் நன்றாக இருந்ததென அறிவிக்கப்பட்டது.

நெல் ராகி, தானியங்கள் சில விடங்களில் அறுவடையாயின; விளைச்சல் சாதாரணமாகவிருந்தது.

### மிளகாய் சாகுபடி

தமிழ் நாட்டில் 1956—57-ம் ஆண்டில் 1,42,100 ஏக்கரில் மிளகாய் சாகுபடியாயிற்று. சென்ற ஆண்டில் மிளகாய் சாகுபடி பரப்பளவு 1,39,500 ஏக்கர்; முந்திய 5 ஆண்டுகளின் சராசரி பரப்பளவு 1,17,100 ஏக்கர்களாகும்.

நீலகிரியில் முன்னைய ஆண்டின் அளவிலும், செங்கற்பட்டு, தென் ஆற்காடு, வட ஆற்காடு, தஞ்சாவூர் மாவட்டங்களில் குறைந்த அளவிலும், இதர மாவட்டங்களில் அதிகமாகவும் மிளகாய் பயிராயிற்று. தஞ்சை மாவட்டத்தில் பூச்சிகளாலும், சேலத்தில் மழையினாலும் பயிர் பாதிக்கப்பட்டது.

# நிலக்கரி உற்பத்தியைப் பெருக்குவதற்குத்திட்டம்

## வடக்கில் தீவிர ஆராய்ச்சி

புதுடில்லி, ஜூலை 17—

மத்தியப் பிரதேசத்திலும், பீகாரிலும் பல்வேறு ரகங்களைச் சேர்ந்த 18,45,00,000 டன் நிலக்கரி உள்ள புதிய இடங்களை இந்திய சுரங்க நிறுவனம் கண்டுபிடித்திருக்கிறதாம்.

இந்த ஆராய்ச்சி நடவடிக்கைகளுக்காக பூமியில் 1,71,000 அடிக்கு சோதனைக் குழிகள் வெட்டப்பட்டதாம்; இந்தத் திட்டத்தின்கீழ், மொத்தம் 4,13,300 அடிவரை குழிவெட்டத் திட்டமிடப்பட்டிருக்கிறது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டகால இறுதிக்குள் உற்பத்தி அளவு மொத்தம் 6-கோடி டன் எய்துவதற்கு வகைசெய்வதற்காக இந்த ஆராய்ச்சி நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டிருக்கிறதாம்.

# ‘சிறைச்சாலைகள் கல்விக்கூடங்களாக மாற்றப்பட வேண்டும்’

## சட்டசபையில் ஏ.வி.பி.ஆசைத்தம்பி நல்லுரை

சென்னை, ஜூலை 16—

சட்டசபையில் சிறைச்சாலைகள் செலவுக்காக ரூ. 91.15,800 மானியமாக அனுமதிக்க வேண்டும் என்று அமைச்சர் பி. பக்தவத்சலம் கோரினர்.

இதற்கான வெட்டுப் பிரரேபணைமீது பேசுகையில் கழக உறுப்பினர் ஏ. வி. பி. ஆசைத்தம்பி அவர்கள் அரிய பல கருத்துக்களைத் தெரிவித்து, சிறை சீர்திருத்தம் சம்பந்தமாக அரசாங்கம் கையாள வேண்டிய முறைகளை எடுத்துரைத்தார். அவர் பேசியதின் சுருக்கம் இங்கு தரப்பட்டிருக்கிறது :—

“சிறைச்சாலைகளைப் பற்றி காங்கிரஸ்காரர்கள் என்ன சொன்னுர்கள் என்பது புதிய காங்கிரஸ்காரர்களுக்குத் தெரியாமல் இருக்கலாம்; ஆனல் மக்கள், அவர்கள் சொன்னதை மறக்கவில்லை.

“சிறைகள் எப்படி இருந்தன? இப்போது எப்படி இருக்கின்றன? —என்று பார்த்தால், உண்மையில் சுதந்திரம் கிடைத்த பிறகும், 10 ஆண்டுகளுக்கு முன்னல் இருந்த நிலையிலேயே அவைகள் இன்னும் இருக்கிறது என்றுதான் கூறவேண்டும்.

“சிறைகள் சீர்திருத்தப்படவில்லை என்பதை கட்சிபேதமில்லாமல் ஆராய்ந்தால் நன்கு தெரியவரும். காங்கிரஸ்காரர்கள் சிறை சென்ற பிறகு, நாங்கள் சிறை சென்றிருக்கிறோம்.

“ஆச்சாரியார் காலத்தில் ஆயுள் தண்டனை பெற்றவர்களை விடுதலை செய்யப்போவதாக உறுதியளித்தனர்; ஆனல், பதவிக்கு வந்த பின்னர் அவர்கள் அவ்வாறு செய்தனரா? இல்லையே!

“சிறைச்சாலைகள், குற்றம் செய்பவர்களை திருத்தவே பயன்பட வேண்டும்; ஆனல் இப்போது, மேலும் குற்றங்கள் செய்யத் தூண்டுவதற்கே அவைகள் பயன்படுகின்றன.

“சிறையில் கைதிகளுக்கு மதிப்பில்லை; மரியாதை தரப்படுவது இல்லை. சர்க்கஸ்காரன் தன் கூண்டில் அடைபட்டு கிடக்கும் மிருகங்களுக்குத் தரும் மதிப்பு கூட சிறையில் உள்ள கைதிகளுக்குத் தரப்படுவதில்லை.

“1950-ல் நான் தண்டிக்கப்பட்டேன்; என்னை நிர்வாணமாக்கி அவமதித்தார்கள்; திருச்சி சிறையில் வைக்கப்பட்டேன். அப்படி நான் செய்த பெரிய தவறு என்ன? காந்தியாரைச் சுட்டுக் கொன்ற சம்பவத்தைப் பற்றி ஒரு புத்தகம் எழுதினேன்; அதுவும், வகுப்பு வெறியை ஒழிக்வே எழுதினேன்; அதற்காகத்தான் நான் தண்டிக்கப்பட்டேன். அது மட்டுமல்ல; மறுநாள் என் தலையை மொட்டை அடித்தார்கள்; நாடு பூராவும் கண்டன குரல் எழுந்தது; அதைப்பற்றி விசாரணை நடத்துவதாக அப்போது சொன்ஞர்கள்; ஆனல் பிறகு என்ன ஆயிற்று என்றே தெரியவில்லை? இப்படிச் சிறையில் மனிதத் தன்மையற்று கைதிகளை நடத்தக் கூடாது என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

“படிப்பதற்காக முன்வரும் மாணவர்களுக்கு இடம் இல்லை என்று எவ்வாறு கூறப்படுகிறதோ, அதேமாதிரி நிலைதான் சிறையிலும் நீடிக்கிறது.

“நாங்கள் நடத்திய மும்முனைப் போராட்டத்தின்போது 2,000 பேர் இருக்கவேண்டிய சிறையில் அதிகப்படியானவர்களை அடைத்து வைத்தனர். சப்-ஜெயில்களில் ஒரு தனி அறையில் 10 பேர்களைக்கூட இந்தி எதிர்ப்பு நேரத்தில் அடைத்துவைத்தனர்; அதே அளவு இன்னும் நீடிக்கிறது. சிறையில் கைதிகள் குளிப்பதற்கு தண்ணீர் கிடைப்பதில்லை. தண்ணீரைத் தொட்டுத் தொட்டுத்தான் உபயோகப்படுத்த வேண்டியுள்ளது. அவர்கள் குளிப்பதற்கும் நேரம் இல்லை.

“மேலும், காலைக் கடன்களை முடிப்பதற்கும் வசதியில்லை. உறவினர்கள் வந்தால் சந்தித்துப் பேசுவதற்கு 10 நிமிடங்களாவது தரப்படவேண்டும். கைதிகள் படிப்பதற்கு எல்லா கட்சிப் பத்திரிகைகளும் தரப்படவேண்டும். அந்தப் பத்திரிகைகளிலுள்ள செய்தியை மறைப்பதற்கு கருப்பு மையை பூசுவது கூடாது.

“கைதிகள் தூக்குப் போட்டுக் கொள்வார்கள் என்று கருதி, அவர்களின் அரைஞாண் கயிறை அறுத்தெறிவது பைத்தியக்காரத்தனமாகும். வாரத்திற்கு ஒரு முறையாவது முகம் வழித்துக் கொள்வதற்கு வசதி செய்து தரப்படவேண்டும்.

“வரப்போகும் சுதந்திர—நூற்றுண்டு விழாவின்போது கைதிகளை விடுதலை செய்யவேண்டும்.

“சிறையில் பணியாற்றும் ‘வார்டர்’களின் குறைகளையும் கவனித்து, அவர்களுக்கு அதிக ஊதியம், வீட்டு வசதி, அவர்களுடைய பிள்ளைகளுக்கு படிப்பு வசதி செய்து தரவேண்டும்.

“சிறைகள் சிந்தனைக்கூடமாக — அறிவுக்கூடமாக — தொழில் நிலையமாக மாற்றப்படவேண்டும்.

“மதச் சார்பற்ற அரசாங்கம் என்று கூறும் இந்த அரசாங்கம், சிறையில் மதபோதனையைத் தடை செய்யவேண்டும்.”

வெட்டுப் பிரரேபணை தோல்வியுற, மானியக் கோரிக்கை நிறைவேற்றப்பட்டது.

# ‘உள்ளதை இழந்துவிட்டு டெல்லியிடம் பிச்சை எடுக்காதீர்’

## ‘எதிர்க் கட்சிகளை மதிப்பதே நல்ல ஜனநாயகமாகும்’

### சட்டசபையில் தோழர் க. அன்பழகன் நல்லுரை

சென்னை, ஜூலை 16—

சட்டசபையில் நிதி அமைச்சர் சுப்பிரமணியம் சட்டசபை நிர்வாக செலவினங்களுக்காக ரூ. 40,58,300 மானியமாக அளிக்க வேண்டும் என்று கோரினர்.

தி.மு.க. சட்டசபை கட்சியின் துணைத்தலைவர் க.அன்பழகன் அவர்கள், வெட்டுப் பிரரேபணைமீது பேசுகையில், பல அரிய கருத்துக்களைத் தெரிவித்தார்.

அவர் பேசிய கருத்துக்கள் இங்கு தரப்பட்டுள்ளன :—

“இப்போது சட்டசபை நிகழ்ச்சிகள் தமிழில் நடத்தப்படுகிறது; அறிக்கைகள் தமிழில் அச்சிடப்படுகின்றன; குறிப்பு எடும் தமிழில் வெளியிடப்பட்டுள்ளது ; இந்த மாறுதலை நான் வரவேற்கிறேன். நிகழ்ச்சிகள் நல்ல முறையில் நடைபெற இது பெரிதும் உதவியாக இருக்கிறது ; அதற்காக நான் பாராட்டுகிறேன். அதோடு 51-வது ஆண்டில் நுழையும் முதலமைச்சரையும் வாழ்த்துகிறேன்.

“மாற்றுக் கட்சியினர் வெளிப்படுத்தும் கருத்துக்கள் சிலருக்குத் தவருகத் தோன்றலாம் ; ஆனல், அந்தக் கருத்துக்கள் காலப்போக்கில் பெருவாரியான மக்களின் ஆதரவைப் பெறும். எனவே, அவர்களுக்கு ஒன்றும் தெரியாது என்று தங்களை சகலகலா வல்லுநர்களாக நினைத்துக்கொண்டு பேசுவது சனநாயகத்தை வளர்ப்பதாகாது ; எதிர்க்கட்சிகளை மதிப்பதாகாது. எதிர்க்கட்சிகளின் எண்ணிக்கையைக் கொண்டு முடிவு செய்வதைவிட, அவர்களின் எண்ணத்தைத்தான் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். நல்ல சனநாயகம் வளருவதற்கு பல்வேறு கருத்துக்கள் மோதவேண்டியது அவசியம் என்பதை மறந்துவிடக் கூடாது.

ஆளும் கட்சியைச் சேர்ந்த அமைச்சர்கள் கூட்டங்களுக்கு வருவதானல் பள்ளிக்கூடங்களுக்குக்கூட விடுமுறை தரப்படுகிறது; ஆனல் எதிர்க்கட்சிகள், தெருக்களில் கூட்டம் கூட்டுவதானலும், ‘நடைபாதையில் செல்பவருக்கு இடையூருக உள்ளது’ என்று காரணம் கூறப்பட்டு, தடையும் விதிக்கப்படுகிறது. எனவே ஆளும் கட்சியினர், எதிர்க்கட்சியினர் கூட்டம் நடத்துவதற்கேற்ற வசதிகளை எற்றமுறையில் செய்துதர வேண்டும்.

“சட்டசபையில் எதிர்க்கட்சியினர் கூறும் கருத்துக்களை அமைச்சர்கள் கவனிக்க வேண்டும். அமைச்சர்கள் பல்வேறு காரியங்களில் ஈடுபட்டிருப்பதால், ‘வாக்களிப்புக் குழு’விற்கு வருவதில்லை. ஏறத்தாழ 3, 4 ஆண்டுகளுக்கு முன்னல் வாக்களிக்கப்பட்டவை இன்னும் நிறைவேற்றப்படாமல் இருக்கிறது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

“நமக்கு, மேல் சபையென்று ஒன்று இருப்பது அவசியமா? அவர்களில் முக்கியமானவர்களுக்கு இந்தச் சபையில் பிரதிநிதத்துவம் கொடுத்தால் போதாதா? அவர்களுக்குத் தனி சபை இருக்கவேண்டுமா? எவரெவருக்குப் பிரதிநிதித்துவம் தரப்படவேண்டுமோ அதைக் கவனித்து இந்தச் சபையுடன் இணைத்தால் போதாதா? என்னைப் பொறுத்தவரையில் சட்டசபை ஒன்று போதும்; ‘இரண்டு தேவையில்லை,’ என்றே கூறுவேன்.

“இந்த மாநிலத்தில் 3 கோடி மக்கள் வாழ்கிறார்கள். அடுத்த முறை இந்தச் சபை விரிவாகக் கூடும். அப்போது இந்த இடம் போதுமா? மீண்டும் மவுண்ட் ரோடு கட்டிடத்திற்கே சட்டசபைக் கூட்டத்தை மக்கள் அழைக்கப்போகிறார்கள். எனவே இதை மனதில் கொண்டு, மத்திய அரசாங்கத்திடம் அந்தக் கட்டிடத்தை அவசர அவசரமாக ஒப்படைக்கவேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன். இதை இப்போது உணர மறந்தால், நிச்சயமாகப் பின்னர், இக்கட்டிடத்தை மத்திய அரசாங்கத்தை கேட்டுப் பெறவேண்டிய நிலைமை நமக்கு ஏற்பட்டுத்தான் தீரும்; அப்படி கேட்டால் தரப்படுமா என்பதையும் நாம் சிந்திக்கவேண்டும்.

“வரும் பொதுத் தேர்தலில் குறிபோடும் முறை அமுல் செய்யப்படப் போவதாக அறிகிறேன்; அதை நான் வரவேற்கிறேன்.”

வெட்டுப் பிரரேபணை தோல்வியுற, மானியக் கோரிக்கை நிறைவேறியது.

# இன்புளுயன்சா விஷக் காய்ச்சல்

## தமிழ்நாட்டில்தான் அதிகம் பேர் பாதிக்கப்பட்டனர்

கடந்த இரண்டு மாதங்களாக இந்தியாவில் பரவிய இன்புளுயன்சா விஷக் காய்ச்சல், 16,72,252 பேர்களை பாதித்து வாட்டியது என்றும், 511 உயிர்களைப் பலி கொண்டது என்றும் மத்திய சுகாதார மந்திரி கார்மார்க்கர், மக்கள் சபையில் தெரிவித்திருக்கிருர். தமிழ் நாட்டில்தான் இந்த நோயால் தாக்கப்பட்டவர்களின் தொகை அதிகம் என்றும், அங்கு 5,08,309 பேர் தாக்கப்பட்டனர் என்றும் அந்த மந்திரி தகவல் தந்திருக்கிருர்.

நோய்க்கு பலியானவர்களின் தொகை மேற்கு வங்கத்தில்தான் அதிகம்—அதாவது சுமார் 211 பேர் இறந்து விட்டனர்.

தமிழ்நாட்டில் இந்தக் காய்ச்சலால் 59 பேர் இறந்தனா என்றும் கூறப்பட்டிருக்கிறது.

# மாயூரம் தொகுதி தேர்தல் வழக்கு

நாகை, ஜூலை 13—

மாயூரம் தொகுதி தேர்தல் வழக்கு இன்று விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டு இரு தரப்பு வாதங்களும் நடைபெற்று முடிவடைந்தது. தீர்ப்பு ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது.

கழக அபேட்சகர் தோழர் குடவாசல் — கிருட்டிணமூர்த்தி அவர்களின் சார்பில் சென்னை வழக்கறிஞர் வி. ஜி. இராவ் எம். எல். சி., பார்-அட்-லா அவர்களும், நாகை வழக்கறிஞர் சே. இராசகோபாலன் பி. ஏ. பி. எல். அவர்களும் வாதாடினர்கள்.

(ந. நி.)

## கேரள மாநிலத்தில் மதுவிலக்கு ரத்தாகுமா ?

திருவனந்தபுரம், ஜூலை 16—

கேரள மாநிலத்தில் மதுவிலக்குத் திட்டம் வெற்றியடைந்திருக்கிறதா, இல்லையா என்பதை அறிந்து கொள்வதற்கான புள்ளி விவரங்கள் இப்போது சேகரிக்கப்பட்டு வருவதாக சட்டசபையில், மதுவிலக்கு இலாகா பொறுப்பையும் ஏற்றுக் கொண்டுள்ள அமைச்சர் திருமதி எஸ். ஆர். கௌரி தெரிவித்துள்ளார்.

## கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள அதிகாரிகள் எண்ணிக்கை

### சட்டசபையில் தகவல்

சென்னை, ஜூலை 17—

‘புதிய மாநில அமைப்பின் காரணமாக சென்னை மாநிலத்துடன் இணைக்கப்பட்ட கன்னியகுமரி மாவட்டத்திற்கு இதர மாவட்டங்களிலிருந்து மொத்தம் 99 பதிவு பெற்ற அதிகாரிகளும், 18 பதிவு பெருத அதிகாரிகளும் மாற்றப்பட்டனர்; என்று சட்டசபையில் நிதியமைச்சர் வில்லியம் என்ற உறுப்பினருக்கு கேள்வி நேரத்தில் அறிவித்தார்.

சந்தர்ப்பம் ஏற்படும்போது அங்குள்ள அதிகாரிகளுக்கு உத்தியோக உயர்வு அளித்து வேறு மாவட்டங்களுக்கு அனுப்புவதாகவும் அமைச்சர் உறுதியளித்தார்.

## தமிழ் நாட்டு சிறைகளில் கைதிகளின் எண்ணிக்கை

சென்னை, ஜூலை 16—

1956-ம் ஆண்டில், சிறைகளில் நாள்தோறும சராசரியாக 15,01,460 பேர் இருந்தனர்; முன்னைய ஆண்டில் 15,62,868 பேர் இருந்தனர்.

# கழகக் கூட்டங்கள்

★

**திண்டுக்கல் — எரியோடு**

சந்தைத் திடலில்
19—7—57 மாலை 6 மணிக்கு
தலைவர் : பி. இராமசாமி
பேசுவோர் :
நாஞ்சில்-கி. மனேகரன்
பி. சமதர்மம்
எம். கே. கே. சாமி
(இரவு ‘கட்டபொம்மன்’ நாடகம் நடைபெறும்)

★

**மடத்துக்குளம்**

அப்பாவு தேவர் திடலில்
19—6—57 இரவு 7 மணிக்கு
தி. மு. கழகத் துவக்கவிழா
தலைவர் : எம். மாரியப்பன்
பேசுவோர் :
டி. கே. சீனிவாசன்
கே. ஏ. கிருஷ்ணசாமி
கே. என். சரபோஜி
உடுமலை-நாராயணன்

## சென்னை 40-வதுவட்ட தி. மு. கழக பொது உறுப்பினர்களுக்கு

“21—7—56 ஞாயிறு காலை 10 மணியளவில், சென்னை—சேப்பாக்கம், தாகூடின்கான் தெருவிலுள்ள 8-ம் எண்ணுள்ள தமிழ் வளர்ச்சி மன்றத்தில், 40-வது வட்ட தி. மு. கழக பொது உறுப்பினர்கள் கூட்டம் நடைபெறும்; அதுபோது, மேற்படி வட்டக் கிளைக்கு புதிய நிர்வாகக் குழு தேர்ந்தெடுக்கப்படும். உறுப்பினர்கள் அனைவரையும் கலந்துகொள்ளக் கேட்டுக்கொள்கிறேன்” என்று சென்னை மாவட்ட தி. மு. கழக துணைச் செயலாளர் கோ. செங்குட்டுவன் அவர்கள் அறிவிக்கிருர்.

## சொற் பயிற்சிக் கூட்டம்

19—7—57 இரவு 8-மணிக்கு, சென்னை—சூளை தி. மு. கழக மனையில், தோழர் இராசேந்திரன் தலைமையில், ‘கம்பரும்—வள்ளுவரும்’ என்னும் பொருள் பற்றி தோழர்கள் பலர் பேசுவர்.

## சென்னை—சைதையில் தியாகராயர் மன்றத் துவக்கவிழா

19—7—57 மாலை 5-30 மணிக்கு சென்னை — சைதை, சி. ஐ. டி. நகர்—கலெக்டர் அலுவலகம் எதிரில், தோழர் பொ. பாண்டியன் அவர்கள் தலைமையில் மேற்படி மன்றத் துவக்க விழா நடைபெறும்; தோழர்கள் க. அன்பழகன் எம். ஏ; எம். எல். ஏ., நடிகமணி டி. வி. நாராயணசாமி, ஏ. எஸ். ஜேசுபாதம் ஆகியோர் சிறப்புரை நிகழ்த்துவர். அ இராபர்ட் இயக்கப்பாடல்கள் இசைப்பார்.

## போக்குவரத்து இலாகாவில் தொழிலாளருக்குப் பங்கு

### சென்னை சர்க்கார் திட்டம்

சென்னை, ஜூலை 16—

நிர்வாகத்தில் தொழிலாளருக்கும் பங்கு அளிக்கும் யோசனையை செயல் முறையில் பரீட்சித்துப் பார்க்கும் நோக்கத்துடன், சென்னை நகர பஸ் போக்குவரத்து இலாகாவில் நிர்வாகத்தினர்—தொழிலாளர் ஆகியவர்களின் பிரதிநிதிகளைக் கொண்ட கூட்டுக் குழு ஒன்றை அமைப்பதற்கு சென்னை சர்க்கார் திட்டமிட்டிருப்பதாகத் தெரிய வருகிறது.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர் : இரா நெடுஞ்செழியன் எம்.ஏ.

